உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩௦] ஆங்கிரஸ ஹு ஐப்பசி மீ [பகுதி-௧௨.
Vol. XXX. October-November-1932. No. 12.

## கம்பராமாயண இன்கவித்திரட்டு.

[௨௯௨-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

### கார்காலத்தால் இராமன் விரகவேதனை மிகுதல்.

500 தேரைக் கொண்டபே ரல்குலாள் திருமுகங் காணான்,
ஆரைக் கண்டுயி ராற்றுவான்? நல்லுணர் வழிந்தான்:
மாரற் கெண்ணில்பல் லாயிர மலர்க்கணை வகுத்த
காரைக் கண்டனன், வெந்துயர்க் கொருகரை காணான்.

இ-ள். சீதையின் முகத்தைக் காணான இராமன், மன்மதனுக்குப் பல ஆயிர (க் கணக்கான) புஷ்பபாணங்களை உண்டாக்கி (உதவி)ய கார்காலத்தைக் கண்டு கொடிய (விரக) வேதனைக்கு ஒரு கரையுங் காணாதவனாய் அறிவழிந்தவனானான், (சீதையைக் கண்டு தன் பம்மீக்கினாலன்றிச் சீவனை யிழந்துவிடுவானாயிருந்த அவன் அவளை யன்றி வேறு) யாரைக்கண்டு உயிர்தரித்திருப்பான்?

ஆற்றுதல் - தாங்குதல் - தரித்தல் - சுமத்தல். மாரன் - மன்மதன். ஆயிரம், அளவின்மைகுறித்தது. மேகம், மழைபெய்து பூஞ்செடிகள் கொடிகள் மரங்களை நிரம்பப் பூக்கும்படிசெய்தது, காமுகரை எய்து துன்புறுத்தற்குப் பூக்களாகிய அம்புகளை மன்மதனுக்குக் கொடுத்ததாக உருவகிக்கப்பட்டது. நான்குதிசைகளிலுமுள்ள நான்கு கரைகளுள் யாதாயினும் ஒன்றையுங் கண்டிலனென்பார், கரைகாணானெனக் கூறாது ஒருகரை காணானென்றார். செய்யுளாதலால், ஒருகரையுங் காணானென்பது ஒருகரை காணானென உம்மை தொக்கது.

'"காரைக் கண்டனன்; கரை காணான்" என்றவிடத்து ஒருவகைச் சொற்சமத்காரம் காண்க. கண்டனன் காணான் என மாறுபடச் சொற்கள்வந்தது தொடைமுரண்.'

காமனால் தவசிகளும் கலங்குங் கார்காலத்தில்
இராமன் கலங்குதல் வியப்பன்றெனல்.

[காமத்தை யெழுப்பி வளர்க்குங் கார்காலத்தில் முற்றத்துறந்த முனிவரும் மனவுறுதிதளருதல் சகசமாதலால், அந்தக்காலத்தில், எல்லாநலங்களும் இனிதமைந்த சீதாதேவியுடன் கூடியாடிக் குலாவி இன்புற்று வாழ்ந்திருந்த இராமன் விரகவேதனை மிகுதியாக வருந்தியது வியப்போ? அவ் வருத்தத்தால் மனங்கலங்கிச் சித்தப்பிரமையுற்றான்.

இராமன் விரகவேதனைமிகுதியால் சித்தப்பிரமைகொண்டு
மேக முதலியவைகளை நோக்கிப் புலம்பல்.

இராமன் மேகத்தை நோக்கி, மேகமே! சீதையைக் கவர்ந்து ஒளித்துவைத்திருக்கும் தீயோனது ஊருந் தெரியேனாய்ப் பெருந்தீங்கு செய்த அவனுக்குச் சிறுதீங்குஞ் செய்யமாட்டாமையால் செத்தொழியாது உயிர்சுமந்து உழன்றுதிரியும் யான் அந்தப் பாவியாற் கலங்கியிருப்பது காணாதென, அதிகமாகக் கலங்கச்செய்கின்றாயே. சீதையின் மேனிபோலும் மின்னலை அடிக்கடி தோன்றி மறையச்செய்தலால், அவளைக் காட்டிக்காட்டி மறைக்கின்றாய்போல்கின்றாய். இவனுக்குச் சீதையைக் கொடுத்தல் செய்யவில்லையாயினும், காட்டவாவது செய்வோமென்று என்பால் இரக்கங்கொண்டாயோ? (சிறுவர்க்குத் தின்பண்டங் காட்டிக், கொடுக்காதுமறைப்பார்போல, என்னை ஏமாற்றி விளையாடுகின்றாயோ?). இராக்கதரது கரிய பெரிய வடிவம்போலக் கறுத்துப் பெருத்த உருவமுடையாய். அவர்கள் அந்தரத்தில் சஞ்சரித்துக் கோரப்பல்லாலும் வெடிக்குங் குரலாலும் ஆரையும் அச்சமுறச்செய்தல் போல, நீயும் வானில் உலாவி மின்னலாலும் இடிக்குங் குரலாலும் எல்லாரையும் பயமடையச்செய்கின்றாய். அவரேபோல, உயிர்கொண்டாலன்றி யொழியாய்போலும் என்றும்—மயிலை நோக்கி, மயிலே! உன் சாயலால் சீதையை நினைப்பூட்டுகின்றாய். அவளைக் கொண்டுவந்து கொடுத்து மகிழச்செய்யாது வருந்தச்செய்கின்றாய், நீ கொடியாய்

என்றும்—பூங்கொடியைநோக்கிச், சீதையின் இடையழகை நினைவுறுத்தி வருத்துங் கொடியே! என்னைத் தாக்கித் துன்புறுத்தும் மழைவாடை வீசலுக்கு இசைவாக ஆடி நீயும் வருத்துகின்றாயே என்றும்—மானை நோக்கிச் சீதை யிருக்குமிடத்தைச் சொல்லென்றும்—தன் உயிரை நோக்கி, உயிரே! பிராணனாகிய உனக்கும் பிராணநாயகியாகிய சீதைக்கும் உள்ள சம்பந்தத்தைத் தெரியாயோ, தெரிந்திருந்தால் அவளோடு பிரிந்திருப்பாய், பிரிந்திருந்தால் யான் இத்துன்பத்தை அறிந்திரே னென்றும் புலம்பினான்.]

இராமன் மழைவாடைக்கு வருந்திப் புலம்பல்.

501 ஒடைவாள் நுதலி னாளை ஒளிக்கலாம் உபாயம் உன்னி
நாடிமா ரீச னார்,ஓர் ஆடக நவ்வி ஆனார்;
வாடையாய்க் கூற்றி னாரும், உருவினை மாற்றி வந்தார்:
கேடுசூழ் வார்க்கு வேண் டும் உருக்கொளக் கிடைத்த வன்றே

இ-ள். (முன் என்னைத் துன்புறுத்தச்) சீதையை (இராவணன் கவர்ந்து) ஒளித்தற்கேற்ற உபாயத்தை ஆலோசித்துத் தேடி (யறிந்து) மாரீசனார் பொன்மான் ஆனார்; (இப்போது என்னைத் துன்புறுத்த) எமனார் மழைவாடையாகத் தம் வடிவத்தை மாற்றி வந்தார்: (எனக்குத்) தீங்குசெய்யக்கருதுவார்க்கு (அவர்கள்கருத்தை நிறைவேற்றுதற்குத் தக்கனவாக அவர்கள்) வேண்டும்வடிவங்கள் (அவர்கள் இட்டப்படி) கொள்ளக் கிடைக்கின்றன. (இந்தக்கொடுமையை என் என்பேன்!).

ஒடை—நெற்றிப்பட்டம். ஆடகம்—பொன். நவ்வி—மான்.

'மாரீசனார், கூற்றினார் என்ற பன்மைகள், கோபம்பற்றியன; இகழ்ச்சிக்குறிப்புமாம்.'

இராமன் மன்மதனைக்கண்டதாகக்கருதி அவனைநோக்கிக் கூறுதல்

[சித்தப்பிரமையுற்றிருந்த இராமன், மன்மதனைக்கண்டதாக எண்ணி 'ஏ மன்மதா! என்னெஞ்சு புண்ணாக, நிரம்ப அம்புகளெய்தாய். இவ்வளவுபோதும், இனி என் எதிரே நில்லாதே, போ. என்னைக் காக்க இலக்குமணனிருக்கின்றான் நீ என்னைத் துன்புறுத்துதலை அவன் கண்டால், தடுக்கமுடியாத அவன்கோபத்தால் அழிந்துவிடுவாய்' என்று கூறிப் புலம்பினான்.

## தன்னைக் காக்க இலக்குமணனிருக்கிறனென்று புலப்பத்திற்கூறிய இராமனை இலக்குமணன் தேற்றுதல்.

இலக்குமணன், இராமனை அணுகிநோக்கிச் 'சீதையைத்தேடுதற்கு இடையூறாக உள்ள கார்காலம் நீண்டதாயிருக்கிறதென்றோ, இராக்கதர் வெலற்கரியரென்றோ, வானரசேனை வரவில்லையென்றோ, மற்றெது கருதியோ, மனந்தளர்கின்றாய்? வேதநெறி பேதமெய்தினாலும், மண்ணும் விண்ணும், மதியும் கதிரும், மற்றெவையும் மாறினாலும், ஒருசிறிது நிலைகுலைதலும் உன்பால் நிகழமாட்டாதே. கார்காலம் கழிந்து விட்டது. அரக்கரை அழிக்கும் அறிவும் ஆற்றலுமுடைய அநுமானாதி வானரர்சேனை வந்துவிட்டது. சீதை திரும்பிவிட்டாள். துன்பம் தொலைவாயாக' என்று தேற்றிச் சித்தப்பிரமை தீரச்செய்தான்.

இராமன் தன்னுணர்வுவந்தபின்னும் தளர்தல்கண்டு, இலக்குமணன், 'நீ செயமடைதல் திண்ணம். இவ்வாறு தளர்தல் உன் வீரத்துக்கு ஏற்றதன்று. உடனே செயமடையவொண்ணாமற் கார்காலம், சிறிதுபாகம், கழியாதிருக்கின்றதென்பதொன்றுண்டு. அது பிறர்க்குத் தடையாமன்றி, உனக்குத் தடையாகமாட்டாது. காலங்கடந்த உனக்குக் காலத்தடை யேது. நீ இப்போதே செயிக்க உன்னினால் அதற்கு எத்தடையும் இல்லாததாய்விடும். உனக்கு நீயே நிருமித்துக் கொள்ளுந் தடையன்றி வேறுதடை யாதுமில்லை. ஆதலால் வருந்துதலொழிவாயாக' என்றான்.]

502 திரைசெய்அத் திண்கடல் அமிழ்தம் செங்கணான்
உரைசெயத் தரினும்அத் தொழில் உவந்திலன்:
வரைமுதற் கலப்பைகள் மாடு நாட்டித்தன்
குரைமலர்த் தடக்கையாற் கடைந்து கொண்டனன்.

இ-ள். 'திருமால் (அமிழ்தம் கொடு என்று) கட்டளையிட்டமாத்திரத்திலே, பாற்கடல் அமிழ்தத்தைக் கொடுக்கக்கடவதாயிருந்தும், (கட்டளையிடுவதான இலகுவான) அந்தச் செய (லால் உடனே அமிழ்தம் பெறுத)லை விரும்பானாய், (அதனைக் கடைந்தெடுத்தற்குக் கருவிகளான மந்தர) மலை முதலிய உபகரணப்பொருள்களை (அவைகளிருந்த தூரமான இடங்களிலிருந்து கொண்டுவந்து ஒன்றுசேர்த்து அந்த)க் கடலிலே

நாட்டித் தன் கைகளினால் (சிரமப்பட்டுக்) கடைதல்செய்தே (அமிழ்தத்தை எடுத்துக்) கொண்டான். (கேவலம் நினைத்தலாலேயே நினைத்தகாரியத்தை நீ நிறைவேற்றவல்லையாயினும், அவ்வாறு செய்யாமல் தக்ககாலத்தில் தக்கதுணைவரைக்கொண்டு செய்தற்குரியவற்றைப் பலமுறை சிந்தித்துத் தெளிந்து செய்து செயமடைவாயாக' என்று இலக்குமணன் சொன்னான்.)

திரைசெய்–அலைகளை உண்டாக்குகின்ற–அலைவீசுகின்ற. 'அகாச் சுட்டு பிரசித்திபற்றியது'. திண்–வலிமையுடைய. செங்க(ண்)ணன் இங்கே திருமாலைக்குறித்தது. உரைசெய–சொல்ல. கலப்பைகள்-உபகரணப்பொருள்கள். மாடு-இடம், இங்கே கடலினிடத்து எனப் பொருள் கொள்ளநின்றது. குரை மலர் தடம் கை-(ஆபரணங்கள்) ஒலிக்கின்ற (தாமரைப்) பூப்போன்ற விசாலமான கைகள்.

## கார்கால முடிவில், கார்மேகம் வெண்மேகமாகுதல்.

[இப்போது காலை, இப்போது நடுப்பகல், இப்போது மாலையென நேர்தெரியாதவாறு எப்போதும் சூரியனை மூடியிருந்த நீர் நிறைந்த கார்மேகம், நீர் முழுவதையும் பொழிந்து மேற்கொண்டு பெய்ய நீரின்றி வெண்மேகமானபோது, உள்ளபொருள்களொன்றும்விடாம லுதவிப் பொருளற்றபோது ஏற்பார்க்கு ஈய இயலாமையால் வெள்கி வெளிறும் வள்ளலை ஒத்தது.]

## மேகம் நீங்கச் சந்திரன் விளங்கினது, மறைத்த திரை நீக்கப்பெற்ற மாதர் முகம் போன்றது.

503 கடம்திறந் தெழுகளி றனைய கார்முகில்
இடம்திறந் தேகலிற் பொலிந்த திங்களும்,
நடம்திறன் நவில்வுறு நங்கை மார்முகம்
படம்திறந் தொருவலிற் பொலியும் பான்மைபோல்.

இ-ள். (கரிய) யானைபோன்ற கார்மேகம் (தான் தங்கியிருந்த வானத்தின்) இடத்தை (வெளியாம்படி நீங்கி)த் திறந்து சென்றுவிட்டதனால் (அம் மேகத்தால் மறைக்கப்பட்டிருந்த) சந்திரன், (மறைந்திருந்த) திரைச் சீலை திறக்கும்படி உருவப்பட்டதனால் (மறைக்கப்பட்டிருந்த), நாட்டியமாதர்முகம் விளங்குதல்போல விளங்கலுற்றது.

கடம்-யானைக்கதுப்பு-யானையின்கன்னம். கடம் திறந்து எழு களிறு அனைய-கன்னம் (அதன்கணுள்ள மதநீர்வெளிப்படும் துளை) திறக்கப்பட்டு (மதம் பொழிந்து கொண்டு) புறப்படுகின்ற (கரிய) யானை போன்ற. கார் முகில்-கருமை (நிறமுடைய) மேகம்; கார்காலத்துமேக மெனலுமாம். யானை, மேகத்துக்கும், மதநீர்பொழிதல், மழைநீர்பொழி தலுக்கும் உவமை. கருநிறமும் கதியும் முழக்கமும் யானைக்கும் மேகத் துக்கும் பொதுக்குணங்கள். இந்து-சந்திரன். நடம் திறம் நவில்-நட னத்தைச் சாமர்த்தியமாகச்செய்கின்ற. படம்-திரைச்சீலை. பான்மை-குணம்-தன்மை. படம் திறக்க என்பதில் திறக்க, திறந்து எனத் திரிந்து நின்றது. 'சொல்திரி யினும்பொருள் திரியா வினைக்குறை'. (வினைக் குறை-வினையெச்சம்).

இப்பாட்டிலுள்ள ஒப்புமைநயம் ஊன்றிநோக்கி உவக்கத்தக்கது.

கார்காலம் கழிந்தபோது நிகழ்ந்த நிகழ்ச்சிகள்.

[(இருள் நீங்க இராக்காலம் நீங்குதல்போல) கார்மேகம் ஒழியக், கார்காலம் கழிந்தது. அப்போது, எல்லாரும் ஒன்றாகச்சேர்ந்து பாடம்படிக்கும் பள்ளிப்பிள்ளைகள்போல, எல்லாம் ஒருமித்துக் கத்திக் கொண்டிருந்த தவளைகள் வாயடங்கின. சிறைவிரித் தாடிக் களித்த மயில்கள், சிறைகளை ஒடுக்கிச், சிறையில் ஒடுங்கியிருந்த சீதைபோலச் சோர்ந்திருந்தன. மழைக்கொதுங்கிப் பதுங்கியிருந்த பறவைகள் சீதையைத் தேடுங்காலம்வந்ததென்று எங்குந் தேடிச்செல்வனபோலப் பலதிசைகளிலும் பறந்துசென்றன]

கார்காலப்படலம் முற்றிற்று.

(தொடரும்.)

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்

---

# பரிமேலழகரும் மணக்குடவரும்.

[உஉஉ-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

## கடவுள்வாழ்த்து.

இவ்வதிகாரத்திற் பரிமேலழகர்கொண்ட குறள்வைப்புமுறை வேறு; மணக்குடவர்கொண்ட வைப்புமுறை வேறு. இங்ஙனமே நீள மாறுபட்டுள்ளார்கள்.

பரிமேலழகர், 'அகரமுதல' 'கற்றதனலாய' 'மலர்மிசை' 'வேண்டுதல்' 'இருள்சேர்' 'பொறிவாயில்' 'தனக்குவமை' 'அறவாழி யந்தணன்' 'கோளில்' 'பிறவிப்பெருங்கடல்' என முறைப்படுத்தி யுள்ளார்.

மணக்குடவர், 'அகரமுதல்' 'கற்றதனலாய' 'மலர்மிசை' 'தனக் குவமை' 'அறவாழியந்தணன்' 'வேண்டுதல்' 'இருள்சேர்' 'பொறிவாயில்' 'பிறவிப்பெருங்கடல்' 'கோளில்பொறியில்' என முறைப்படுத்தியுள்ளார்.

பரிமேலழகர் அங்ஙன முறைப்படுத்தினமைக்குக் காரணம் முதற் குறள் கடவுள துண்மையைபுணர்த்தி நிற்றலும், 'கற்றதனலாய' என்பது பொதுவாக மூக்காணவழிபாட்டையும், 'பிறவிப்பெருங்கடல்' என்ப தொழிய மற்றையவை மூக்காணவழிபாட்டை யுடம்பாட்டுமுகத்தானு மெதிர்மறைமுகத்தானு முணர்த்திநிற்றலும், 'பிறவிப்பெருங்கடனீந்து வர்' என்பது அவ்வழிபாட்டையேயுணர்த்தி *நியமித்து நிற்றலுமே யாம். 'மலர்மிசை' 'இருள்சேரிருவினையும்', 'பொறிவாயில்' என்னும் மூக்குறளும் உடம்பாட்டுமுகத்தான் மனமொழிமெய்களின் வழி பாட்டைத் தனித்தனியுணர்த்திநிற்றலேயும், 'தனக்குவமை' 'கோளில்' என்னு மிருகுறளும் எதிர்மறைமுகத்தான் அவ்வழிபாட்டையுணர்த்தி நிற்றலேயுங் காண்க. வணங்காத்தலை பயனில வெனவே வாழ்த்தா வாவும் பயனிலவா மென்பது பெறப்படவைத்ததாகக் கருதினர்; பத்துக் குறளே ஓதிகாரமாகநிகழ்தலினென்க.

---

*"பெற்றதன் பெயர்த்தலை நியமப் பொருட்டே"

மணக்குடவர் அங்ஙனம் முறைப்படுத்தினமைக்குக் காரணம் 'அகரமுதல' 'கற்றதனாலாயபயன்' என்னு மிருகுறளும் கடவுளதுண்மை கூறுதலும், கற்றலின்பயனாக வணக்கத்தை யுணர்த்திநிற்றலும், 'கோளில்பொறியில்' என்பதொழிந்தன வணக்கத்தின் இம்மை மறுமைப்பயன்களை யுணர்த்தி நிற்றலும், 'கோளில்' என்பது வணங்காத வுடம்பை யிழித்துநிற்றலுமேயாம். இம்மைப்பயன் 'மலர்மிசை' என்னுங் குறளாலுணர்த்தப் படுவதாகக்கொண்டுள்ளார். மறுமைப் பயன்=வீடு என்பது அவர்கருத்து. அவ்வீடாவது=அவலக்கவலை கையாற்றினீங்கிப் புண்ணிய பாவ மென்னு மிரண்டனையுஞ் சாராமற் சாதலும் பிறத்தலுமில்லாத தோரு தன்மை என்பது அவர்கொள்கை. 'தனக்குவமை' என்பதனாற் கவலை கெடுமெனவுணர்த்தியதாகவும், அறவாழியென்பதனால் காமமும் பொருளும்பற்றிவரும் அவலங் கெடுமெனவுணர்த்தியதாகவும், 'இருள்சேர்' என்பதனால் புண்ணியபாவம் என்னு மிரண்டு முளவாகாவென வுணர்த்தியதாகவும், 'பொறிவாயில்,' 'பிறவிப்பெருங்கடல்' என்பவற்றாற் சாதலும் பிறத்தலு மின்மையை யுணர்த்தியுள்ளதாகவும் கருதுகின்றனர்.

ஆனல் இஃது அவலங்கெடுமென்றது இது கவலைகெடுமென்றது என்று எழுதியதுபோல இது கையாறுகெடுமென்றது என்று எழுதுவதற் கொருகுறளு மவர்வசப்பட்டிலது. ஆதலின் எழுதியபடியே முடித்திலர்.

அன்றியும், 'வேண்டுதல்வேண்டாமை' யென்னுங்குறள் அவர் எடுத்துக்கொண்ட வீட்டிலக்கணத்து ளொன்றையும்பற்றிநிகழாதுநிற்றலால், காமமும் பொருளும் ஆகாவென்றற்கு 'வேண்டுதல்வேண்டாமை யிலான்' எனப் பெயரிட்டார் என வலியற்ற சமாதானமொன்று எழுதிச்செல்கின்றனர். இதுபற்றிப் பின்னு மாராய்வல்.

இனிப் பரிமேலழகர் 'கற்றதனாலாயபயன்' என்னுங்குறள் முக்கரணவழிபாட்டையும் பொதுவாகக்கூறுதலல்லாமலும் அம்முக்கரணத்தால் வழிபட்டுப் பிறவிப்பிணியறுதல் கல்வியறிவின்பயன் என வுணர்த்தலும், 'அகரமுதல' என்பதற்குப் பின்னிற்றற்கேதுவாயிற்றெனக்கருதியுள்ளாரென்பது, 'ஆகம அறிவிற்குப்பயன் அவன்றாளைத்தொழுது

பிறவிப்பிணியறுத்தலென்பது இதனாற் கூறப்பட்டது' என அக்குற ளுரையிலெழுதியிருத்தலால் வெளிப்படுகின்றது.

தொழல் என்பது கைகளின் வழிபாட்டு வினையன்றோ முக்காணத் திற்கும் பொதுவாத லெங்ஙனமமையுமெனின் நன்றுகூறினாய்! 'தொழுதகையுள்ளும்' 'தொழுதகைதலைமேலேற' 'கைகள்கூப்பித் தொழீர்' 'கையாற்றொழுதே' 'கைதொழூஉப்பரவி' 'கைகள்கூப்பித் தொழுதெழுந் தத்திசை' என வருவன முதலியவற்றால், தொழுதல் கையின் வினையாமென அறித லுண்மையாயினும்,

'ஆலயந் தொழுவது சாலவு நன்று'

'தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்'

'தொழுதூண் சுவையி னுழுதூ ணினிது'

'தொழுநா ளிதுவெனத் தோன்ற வாழ்த்திப்
பீடுகெழு நங்கை பெரும்பெய ரேத்தி
வாடா மாமலர் மாரி பெய்தாங்
கமரர்க் கரசன் றமர்வந் தேத்த' (சிலப்பதிகாரம்)

என வருவனமுதலியவற்றால் மற்றைகரணங்கட்கும் மற்றைய வுடம்பி னங்கங்கட்குமுரியவாமென அறியுமாறு புலப்படல் காண்க.

அன்றியும், 'மனமொழி மெய்களிற் றொழுதவனருளால்' (சங்கரநமச்சிவாயப்புலவர்.)

என விளக்கமுற முக்காணத்திற்கும் பொதுவாக நிகழ்தல் காண்க.

மணக்குடவரும் பொதுவாகத் தொழாராயின் என எழுதியதோ டமையாது வணங்குதல் என்னும் பொருள்பட 'மீண்டும் வணக்கங் கூறியது எற்றிற்கு' என எழுதிச்சேறலை நோக்குக.

அன்றியும், ஈண்டுத் 'தொழல்' என்பது கையாற்றொழலையே யுணர்த்திற்றெனக்கொள்ளின், "மனத்துக்கண் மாசில னாதலனைத்தற-னாகுல நீர பிற" என்பது முதலியவற்றால் மனத்தாற்செய்யும்வினையே சிறந்ததாமெனத் தோன்றலவத்தவர் மனத்தானுன்னலையுணர்த்தாது கையாற்றொழுதலெனக்கூறுவரா? மனத்தன் முதலிற் சுற்றதன்பயன் கையாற்றொழுதலும் பயனற்றதாமே? என்னுமசாவிற் கிறை மொழிய வேலாதாமென்க.

ஆதலால் 'தொழல்' என்பது கைக்கே சிறப்பாய் மற்றையவிடத்துஞ் செல்லுமென்க.

அகர முதல எழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

பரிமேலழகர்.

இவர் இக்குறளில் 'அகரமுதல' 'ஆதிபகவன் முதற்று' என்னும் இருதொடர்மொழிகளையும் தனித்தனி பண்புத்தொகைநிலைத்தொடர் மொழியாகக்கொண்டு அவற்றின் அங்கமான 'முதல' 'முதற்று' என்னும் இரு தனிமொழிகளையும் முதலையுடையன, முதலையுடைத்து என இரண்டனுருபு விரியப் பிரித்து உரைகண்டுள்ளார்.

(அகரமாகிய முதலையுடையன. ஆதிபகவனாகிய முதலையுடைத்து என.)

மணக்குடவர்.

இவர் அவ் விருதொடர்மொழிகளையும் இரண்டாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகக்கொண்டு அவ் விரு தனிமொழிகளையும் 'முதலாகவுடையன' 'முதலாகவுடைத்து' என 'ஆக' என்னும் சொல்லை இடையிற் பெய்து பிரித்து உரைகண்டுள்ளார்.

(அகரமாகிய எழுத்தைத் தமக்கு முதலாகவுடையன. ஆதிபாகிய பகவனைத் தனக்கு முதலாக வுடைத்து என.)

"அதுச்சொல் வேற்றுமை யுடைமை யானும்
கண்ணென் வேற்றுமை நிலத்தி னானும்
ஒப்பி னானும் பண்பி னானுமென்
றப்பாற் காலங் குறிப்பொடு தோன்றும்." (தொல். சொல்.)

என்னுஞ் சூத்திரங்கொண்டு 'முதல' 'முதற்று' என்னும் பகுபதங்களை (பிறமொழிகளை) நோக்குங்கால் அவை அதுச்சொல்வேற்றுமையடியாகத் தோன்றிய வினைக்குறிப்புக்களெனவே தெற்றெனவிளங்கும்.

அவ் வுடைமைப்பொருளடியாகத்தோன்றிய வினைக்குறிப்புக்களை விரித்து விளக்குங்கால் இரண்டனுருபு இடையில் விரியவே விரியும்

எனல் சேனாவரையர் நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியர்க்குடம்பாடானதொன்றாமென்பதை அவரெழுதிய உரைகளைநோக்கின் அறியலாம்.

பொன்னன், கச்சினன், கழலினன் என்பன முதலியவற்றை விரித்துரைக்குங்கால் பொன்னையுடையவன், கச்சினையுடையவன், கழலினையுடையவன் எனவோ, பொன்னைப்பெற்றவன், கச்சினைக்கட்டினவன், கழலினைத்தரித்தவன் எனவோ இரண்டனுருபு இடையிலேவிரிய விரிந்து நிற்கும். அவ்வாறே 'முதல' 'முதற்று' என்பவையும் முதலையுடையன, முதலையுடைத்து என இரண்டனுருபு இடையில்விரியுமாறு விரித்தலே சாலச்சிறக்கும். அதனால் 'அகாமுதல' 'ஆதிபகவன்முதற்று' என்பவற்றின்கண் அகரமாகியமுதலையுடையன, ஆதிபகவனாகிய முதலையுடைத்து என இடையில் பண்புருபைவிரித்தலுஞ் சிறந்ததாயிற்று.

ஆயின் இறைவனை உடைமப்பொருளெனக் கூறலாமோவெனின், ஈண்டு உடைமைப்பொருளென்றதனை ஒன்றற் கடங்கியபொருளென்றுவது, அடிமைப்பொருளென்றுவது கொள்ளற்க; எவ்வகையிலேனுஞ் சம்பந்தமுடைய பொருளாமெனக் கொள்க. சம்பந்தம், உடைமை, உரிமை, கிழமையென்பன ஒருபொருட்சொற்களாமென்க. எமதிறைவன், எம்முதல்வன், எம்முடையிறைவன் என வழக்குண்மையுங் காண்க.

உடையன, உடைத்து என்பவற்றை நோக்கியன்றே முதலையென இரண்டனுருபு விரிக்கவேண்டியதாயிற்று; அவற்றைநோக்கி அகரம் ஆதிபகவன் என்பவற்றினீற்றின் அவ்வுருபை விரிக்கினும் பொருந்துமன்றே; பொருந்துமெனின், 'முதல் என்னும் முன்னிலை (பகுதி) யீற்றின்கண் அவ்வுருபை விரிக்கவேண்டுவதில்லை; அங்கு விரிக்கவியலாதெனின் இங்கு விரித்தல் இன்றியமையாததாம்; அங்கு விரிக்க இயலுமேல் இங்கு 'ஆக' வென்னுஞ்சொல்லை விரித்தாலென்னை? எனின்; அகரமுதலுடையன, ஆதிபகவன் முதல்உடைத்து என்றேனும் அகரத்தை முதல, ஆதிபகவனைமுதற்று என்றேனும் வரின் அகரமாகிய எழுத்தை முதலாகவுடையன எனவும், ஆதியாகிய பகவனை முதலாகவுடைத்து

எனவும் விரித்து உரைகூறலாம்; உருபும் பயனும் உடன்றொக்க கைக் களிறு முதலிய தொடர்களையும் முதல முதலிய தனிப் பிறமொழிகளையும் (பகுபதங்களையும்) விரிக்குங்கால் உருபும் பயனும் உடன்விரியக் கையை யுடைய களிறு, முதலையுடையன என விரியுமன்றி உருபோரிடத்தும் பயனோரிடத்தும் விரியாவென்க.

அன்றியும், அங்ஙனம் விரித்தல் குற்றமிலதாமென்பாருளராயி னும் அங்ஙனம்விரித்தலாற் பயனென்னை யென வினவி விடுக்க.

அன்றியும், ஈண்டு அங்ஙனம் விரித்துப் பொருள்கூறினால், அகா மும், ஆதிபகவனும் தாமாகவே முதலாகாமல் எழுத்துக்களாலும் உயிர்க ளாலும் *முதலாக ஆக்கப்பட்டன எனவும், பல முதற்பொருள்க ளுள் ளன; அவற்றுள் இவை இவற்றையேகொண்டன எனவும் பெறப்படு மன்றே? அதனாலும் அங்ஙனம் விரித்தல் பொருந்தாதென்க.

இனி, சிலர், இக்குறளில் 'ஆதிபகவன்' என்பது பெயர்மாத்திரை யாக நிற்கின்றதெனவுணராமல் 'முதல்' என்றாலும் ஆதியென்றாலும் ஒருபொருளனவேயன்றோ? இருதாம் ஒருபொருளே பெறப்படும்படி கூறுதல் குற்றமன்றோ என்பர். அவர் இந்நூலிலேயே பின்வரும் "அடியளந்தான தாஅய தெல்லா மொருங்கு" என வருவதுமுதலிய பிரயோகங்களையும் "உளப்பூ மருதி னொள்ளிணரட்டி" என்பது முதலிய வாகப் பிறண்டு வரும் பிரயோகங்களையும் கண்டு தெளிக.

அன்றியும், ஆதியென்பதற்கு வேறுபொரு ளுளதென வல்லார் கூறினுங் கூறுவர்.

இனி ஆதியென்பதற்கு நூனெறியே செல்லாதார்சிலர் வெவ்வேறு பொருளுமுரைப்பர். அதனையெடுத்தெழுதலும் மறுத்தலும் பயனில் செயலாமாகலின் விடுத்தனன்.

[தொடரும்]

பண்டித. சித. நாராயணசாமி.

---

*முதலாக—முதற்பொருளாக.

# மதிப்புரை.

1. புலவர்புராணம்:—இது, முருகதாஸசுவாமிகளென வழங்கும் ஸ்ரீதண்டாயுதபாணி சுவாமிகளால் இயற்றப்பெற்றது; தமிழ்ப்புலவர் சரிதங்களைத் தெளிவான செய்யுணடையில் விரித்துரைப்பது. இதன் பெருமைகருதிச் சென்னை ஸருவகலாசங்கத்தார் பலவருடங்களில் இதன் பகுதிகளைப் பரீக்ஷாபாடமாகக் குறிப்பிட்டுவருகின்றனர்.

முன்னோர்மொழியே ஆதாரமாக, குமாரக்கடவுளின் அருள்வழிப் பட்டு, இந்நூலை முற்றுவித்ததாக இதன் ஆசிரியர் கூறியுள்ளார். தெய்வபக்தி, அடியார்பக்தி, ஆசிரியவழிபாடு முதலியவற்றால் இறைவன்றிருவருட்கிலக்காய்ப் பண்டைப் புலவர்பெருமக்கள் இயற்றிய அரும் பெருஞ்செயல்களும், இறுதியில் அவரெய்திய பேரின்பப் பெருவாழ்வும், ஆகியவற்றை வற்புறுத்திக் கற்போரை நல்வழிப்படுத்தலே இந்நூலாற் கருதிய பயனெனக் கொள்ளற்பாற்று.

தெய்வப்புலவர்களை, திருமாலடியார் சிவனடியார் என்னும் வேற்றுமையின்றிப் போற்றியிருத்தலால், இந்நூல் மதவுணர்ச்சியிற் பொது நோக்குடைமையைப் போதிக்கச் சிறந்த கருவியாய் அமைந்துள்ளது. அன்றியும், இதனால் அறியக்கிடக்கும் சமபக்கோட்பாடும் சன்மார்க்கமாபுகளும் எத்துணையோ பல. ஆகலின் இதன் சீர்மைகருதி, இதனை இயற்றிய சுவாமிகளின் குமாரர், ஸ்ரீமாந் தி. மு சேந்திநயகம்பிள்ளையவர்கள் இதன் மூன்றும்பதிப்பை இப்பொழுது வெளியிட்டிருக்கின்றனர். இதன் முகவுரை மிகவும் நுணுகிய ஆராய்ச்சியோடு எழுதப்பட்டுள்ளது. இறுதியில், அநுபந்தமாகச் சில பாடல்கள் சேர்க்கப்பட்டுள்ளன. ஆங்காங்குள்ள கீழ்க்குறிப்புக்களும் மேற்கோட்செய்யுட்களும் பயில்வோர்க்கு மிகுதியும் பயன்றரவல்லன. இங்ஙனம் பல்லாற்றானும் செவ்வையாக அச்சிடப்பெற்ற இப்புத்தகத்தின் விலை முதலிய விவரம் வேண்டுவோர் 'கேசரி பிரிண்டிங் ஒர்க்ஸ், 150, அண்ணாப்பிள்ளைதெரு, ஜார்ஜ்டவுன், சென்னை' என்ற விலாசத்திற்கு எழுதிப் பெறலாம்.

2. மயூரகிரிக்கலம்பகம்:–மயூரகிரியென்பது குன்றக்குடியென்னுங் குமாரவேள் திருப்பதியாகும். அதனைப் புகழ்பொருளாகக்கொண்டு, கலம்பகமென்னும் பிரபந்த இலக்கணம் அமைய, இந்நூல் இயற்றப் பெற்றது. அமராவதிபுத்தூர் சைவத்திருவாளர் வயி. நாக. ராம. அ. இராமநாதன்செட்டியாரவர்கள் இதன் ஆசிரியராவர்.

இவர் நாட்டுக்கோட்டை நகரவணிகர்குலத்தில் உதித்தவர்; குடிப்பிறப்பு, கல்வி, குணம் முதலிய யாவும் ஒருங்குவாய்ந்துயர்ந்தவர்; சிவபக்தியிற் சிறந்தவர்; கல்வியறிவின்பயன் கடவுள்வழிபாடே என்னும் உண்மை கடைப்பிடியாக ஒழுகுபவர். அன்றியும், இவர் சிறந்த நாவன்மையோடு சீரிய செய்யுட்களியற்றும் போற்றல் படைத்தவர்.

இங்ஙனம் இவர் இறைவன் தோத்திரமாக இயற்றிய பனுவல்கள் மிகப் பல. இம் மயூரகிரிக்கலம்பகம் அவற்றுள் ஒன்றாகும். இது சொன்னேக்கம் பொருணேக்கம் முதலிய எந்நோக்கும் இலங்குவதாய், பத்திச்சுவை முதிர்ந்து பயில்வோரைப் பரவசமாக்குகின்றது. இதனுள், அமைந்த இலக்கண இலக்கிய வழக்குவழிப்பட்ட சொற்றொடர்களும், எதுகை மோனை முதலிய தொடைவிகற்பங்களும், உவமை உருவகம் திரிபு சிலேடை முதலான அணிவகைகளும், கற்பனைமலிந்த கருத்தமைதிகளும், அகத்திணைதழுவிய துறைப்பொருட்பகுதிகளும் ஆகிய எல்லாம் ஆசிரியாவர்களின் அருந்தமிழ்ப்புலமையைப் பொருந்தவுணர்த்துகின்றன. இது நிற்க.

இவ்வாசிரியரியற்றிய வேறு சில தனிப்பாடல்களும் இக்கலம்பகத்துடன் ஒருசேரத் தொகுத்து அச்சிடப்பெற்றுள்ளன. அவை ஸ்ரீகற்பக விநாயகர்முறையீடு, மயின்மலைமுருகன்முறையீடு, அரியக்குடி ஸ்ரீநிவாஸப்பெருமாள் திருவிழா வாகனக்கவி என்பனவாம். அவை யாவும் பெருவனப்புற்றுக் கற்பவர்நெஞ்சங் களித்திடச்செய்வன. இப்புத்தகம் வேண்டுவோர், ஆக்கியோர்க்கெழுதிப் பெறலாம்.

3. கன்றும் கனியுதவும்:-இது, திருவையாற்று அரசர்கல்லூரித் தமிழாசிரியர், திரு. L. உலகநாதபிள்ளையவர்களால் எழுதப்பெற்றதொரு அரிய கதைப்புத்தகம்; தமிழ்வள்ளலாரில் தலைமைசான்ற பாரியும் அவன் மகளிரும் புரிந்த கொடைத்திறத்தினை விவரிப்பது; தூய்மையும் இனிமையும் மிக்க செந்தமிழ்நடையுடையது; வசனமாயமைந்த கதைநூல்களில முதற்றரத்தினதாய் மதித்தற்குரியது. ஆகவின் இது பள்ளியிற்பயில்வோர்க்குப் பாடபுத்தகமாகத் துரைத்தனத்தாரின் அங்கீகாரம்பெற்றுவருகின்றது.

மாணுக்கருடைய மனத்தைக் கவர்ந்து தமிழ்ப்பயிற்சியில் அவர்க்குப் போரார்வமூட்டுமாறு இந்நூல் இயன்றுள்ளதன்மையால், இதன் ஆசிரியர் உலகிற்கு மிக்க உபகாரியாகிறார். இதன் மூன்றாம்பதிப்பினை இப்பொழுது சென்னை விவேகபோதினி காரியாலயத்தினர் செவ்வனம்

அச்சிட்டு வெளியேற்றியுள்ளனர். விலை அண 10. விலாசம்:— 'மானேஜர், விவேகபோதினி காரியாலயம், மயிலாப்பூர், சென்னை.'

4. தண்டிகைக் கனகராயன்பள்ளு:-கனகராயனென்பார், பதின்மூன்றும் நூற்றாண்டினிடைப்பகுதியில் அரசன்வேண்டுகோளால், குடிமுதற்சுற்றமும் குற்றிளையோரும் அடியோர்பாங்கும் ஆயமும் பின்செல யாழ்ப்பாணத்திற் குடியேறின வேளாளர்குலதிலகராவர். இவர் மாபிள்ளாரையும் இவரையும் புகழ்ந்து கூறுவது இப்பிரபந்தம். இது மாவிட்டபுரம் சின்னக்குட்டிப்புலவரால் இயற்றப்பெற்றது; நூலாசிரியரின் காலமான பதினெட்டாநூற்றாண்டின் இறுதிப்பகுதியில், கிராமவாழ்க்கையும் கிருஷித்தொழிலும் எய்திபிருந்த நிலைமையை இன்பம் பயக்க எடுத்துரைப்பது ; சிறந்த செய்யுணடையுடையது. இதன் இறுதிப்பகுதி கிடைக்கப்பெறாமல் எஞ்சிநிற்பது வருந்தத்தக்கது.

இதற்கு அரும்பதவுரை, தண்டிகை-கனகசபாபதிபிள்ளையவர்களால் எழுதப்பட்டுள்ளது. யாழ்ப்பாண ஆரியதிராவிட பாஷாபிவிர்த்திச்சங்க உபதலைவர் திரு. வ. குமாரசுவாமி (B A) அவர்கள் தம் நூற்பயிற்சியும் நுண்ணறிவும் கொண்டு பலவகை ஆராய்ச்சிக்குறிப்புக்களெழுதி இதனை வளமுறச்செய்து அச்சிட்டிருக்கின்றனர். இப் புத்தகம் சரித்திர அறிஞராற் போற்றுதற்குரியதாம். விலை அண 10, விலாசம்:— 'பிரமஸ்ரீ J. T. சதாசிவஐயரவர்கள், யா. ஆ. தி. பா. வி, சங்கக்காரியதரிசி, வித்தியாகந்தோர், யாழ்ப்பாணம்.'

5. மகோற்சவசந்திரிகை:—இது, அச்சுவேலி ஸரஸ்வதிவித்தியாசாலைப் புரிபாலகராய்க் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்துவிளங்கும் பிரமஸ்ரீ, ச. குமாரசாமிக்குருக்கள் இயற்றியது. இதில் சிவபுண்ணியம், உற்சவவிதி, உற்சவ பஞ்சகிருத்தியம் என்னும் பகுதிகளால் எத்துணையோ பல அரிய விஷயங்கள் எழுதப்பட்டுள்ளன. திருக்கோயில்களும் அவற்றின் திருவிழாச்சிறப்பும்பற்றிய சைவசமயக்கோட்பாடுகளெல்லாம் தக்க பிரமாணங்களோடு விரிவாக யாவருமுணர எடுத்துரைக்குமியல்பினால் இணையற்ற இப்புத்தகம் அச்சமயத்தாரனைவர்க்கும் இன்றியமையாததாகும். இதன் ஆசிரியரான குருக்களின் கைம்மாறு கருதாத பரோபகாரம் பாராட்டற்குரியது. விலை சதம் 30, விலாசம்:—'திரு. N. பொன்னையா அவர்கள், அதிபர், தனலட்சுமி புத்தகசாலை, சுன்னாகம்,'

6. புகழேந்திப்புலவர் வரலாறு:—இது கோயமுத்தூர் ஸ்ரீமான் சி. கு நாராயணசாமி முதலியாரவர்கள் எழுதியது. முதலியாரவர்கள் பலநாளாக இத்தகைய ஆராய்ச்சித்துறையில் உழைத்துவருதல் யாவரும் அறிந்தது. அதனை பலனாக ஒட்டக்கூத்தர், படிக்காசுப்புலவர், வில்லிபுத்தூரர், அருணகிரிநாதர் முதலியோர் வரலாறுகள் வெளிவந்துள்ளன. அவற்றைப்போலவே இப் புகழேந்திப்புலவர்வரலாறும் சிறந்து திகழ்கின்றது.

புகழேந்தி ஒட்டக்கூத்தர் இருவரையும் இணைத்துக் கர்ணபரம்பரையில் வழங்கும் புனைந்துரைகள் எவரையும் மயக்குறுத்துதலின் உரிய சான்றுகள் தேடி அவற்றினுள் உண்மை துணிந்து நிருவியிருத்தல் இப்புத்தகத்தின் சிறப்பியல்பாகும். அன்றியும், இது மிகத் தெளிவான நடைதழுவிச் செல்லுவதால், பள்ளிச்சிறார்க்கும் பயன்தரவல்லது. இதுபோன்று இன்னும் பல ஆராய்ச்சிகளை இவ்வாசிரியர் வெளியிடுதல் விரும்பற்பாலது. விலை அணா 8. விலாசம்:—ஸ்ரீமான் சி. கு. நாராயணசாமி முதலியாரவர்கள், தாமஸ்வீதி, கோயமுத்தூர்.

7. வாழ்க்கைப்பாடங்கள்:—இது, வித்வான் திரு. N. S. சிவசுப்பிரமணிய ஐயர் M.A., அவர்களால் எழுதப்பெற்றது. கிராம வாழ்க்கையிலே காலங்கழிப்போர்க்கு அறிவுவளர்ச்சிக்குரியனவாய சிறுகட்டுரைகள் முப்பத்தைந்து இதில் அடங்கியுள்ளன. அவை உலகியலறிதல், சமூகச்சீர்திருத்தம், நாகரீகமுன்னேற்றம், கல்வி, வியவசாயம், ஒற்றுமை முதலிய பலதிறப்பட்ட பொருள்பற்றி வரையப்பெற்றன. இதன் வாக்கியங்கள் குறித்தபொருளைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் விளக்குகின்றன. வாழ்க்கையில் பற்றும், நவீனவுணர்ச்சிகளும், மக்களிடைபரவுவதற்கு இஃதொருகருவியாய் அமைவதாகும். விலை அணா 6. விலாசம்:—'கிராமச்சீரமைப்புநிலையம், சத்தியமங்கலம்.'

---

## கம்பராமாயண இன்கவித்திரட்டுத் திருத்தம்.

செந்தமிழ், தொகுதி ௩௦ பகுதி ௧௧, பக்கம் உ௫௩-ல் இரண்டாம் வரியில் ஆறு பருவங்களும் என்பதற்கு முன் ' இந்த ஆரம்ப மேற்கோட் குறியையும், ஒன்பதாம் வரியில் கருதத்தக்கது என்பதற்குப் பின் ' இந்த அந்திய மேற்கோட் குறியையும் இட்டுக்கொள்க.

வே. ப. சு.

---

உ

## சென்னைச் சர்வகலாசங்கத்தார், ப்ரும்மஸ்ரீ மஹாமஹோபாத்யாய தாக்ஷிணாத்யகலாநிதி உ. வே. சாமிநாதையர் D. Litt. அவர்களுக்குக் "கலாநாயகம்" (Doctor of Literature) என்னும் ஆங்கிலப்பட்டம் சூட்டியதுகேட்டு, அன்னார் அருமை பெருமைகளைப் பாராட்டி அந்தாதித்தொடையிற் பாடிய

# நவமணிமாலை.

நேரிசைவெண்பா.

1. தக்க'கலா நாயக'மாச் சார்பட்டம் சென்னைநகர்த்
தொக்ககலா சங்கத்தார் சூட்டினரால்—மிக்ககலை
தேர்ந்த புலவர் சிகாமணி! நின் சீரிந்நாள்
ஓர்ந்துசீர் உற்ற துலகு.

கலிநிலைத்துறை.

2. உலக மெங்கணும் ஒண்கலைக் கதிர்விரித் தோங்கும்
அலகில் பானுவை அணிவிளக் குபசரிப் பதுபோன்ம்
பலகலைப்பெரும் பொருள்படி புகழ்மிகப் பரந்தே
இலகு நிற்கிவர் அளித்தசொற் றொடைச்சிறப் பிசைந்தே.

அறுசீர்க் கழிநெடிலாசிரியவிருத்தம்.

3. தேவா லயம்பு திதொன் றுநனி சிறப்ப எடுத்த லினும்சீர்த்தி
காவா தழியும் ஒன்றைநலம் கவினத் திருத்தல்; ஆங்கதுபோல்
நாவார் புலமைப் புண்ணிய! எந் நாளுந் தமிழ்த்தொன் னூல்பலவா
ஓவா நலத்திற் பதித்துள்ளம் உவந்தாய் கலைமா விற்பனனே.

---

1. தொக்க = கூடிய; இப்பட்டம் அளித்தற்கென்றே விசேஷக்கூட்டம் (Special convocation) கூடிய என்றபடி.

2. போன்ம் = போலும். சூரியனைக் கைவிளக்கால் ஆராதிப்பதுபோலும், பொருணலம் மிக்க நூற்புகழ் சிறந்தவரைச் சொற்றொடைப்பட்டத்தாற் சிறப்பித்தது என்க.

3. புதியகோவில் கட்டுதலைவிடப் பழையதொன்றைத் திருத்திப் பரிபாலித்தல் சிறந்த தருமமாம். அத்தகையதே, புதுநூல்கள் இயற்றலைவிடப் பழந்தமிழ்நூல்களைப் பரிபாலித்தலும்.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

4. சிற்பணி வீர மாண்பும் விளங்குசீர்க் காட்சி யோங்கும்
கற்பணிக் கோவில் மாண்பும் காண்டகு தொண்ட ராற்றும்
நற்பணி மாண்பும் சான்ற நம்தமிழ் நாட்டில் தொன்னூற்
சொற்பணி மாண்பு கூட்டித் தொகுத்தனை போற்றி அம்மா!

கட்டளைக்கலித்துறை.

5. போற்றி மகிழ்வாய் புராரிபொற் பாதம் பொருந்தலர்க்கே
ஆற்றி மகிழ்வாய் அரும்பொறை சாமிநா தைய! மெய்யே
தேற்றி மகிழ்வாய் தினம்பல சீடரைச் செந்தமிழ் அச்(சு)
ஏற்றி மகிழ்வாய் பலசங்கத் தூயநூல் எத்துறவே.

கோச்சகக்கலிப்பா.

6. தூயஅருள் மீனாட்சி சுந்தரர்பால் சைந்திளகி
நேயமுரு குள்ளமுடை நிர்மலனே! நீள்சங்கம்
மேயதமிழ் அமுதூட்டி மேதினியெல் லாம்புரக்கும்
தாயினுநற் றயையுடையாய் சாற்றுவதென் கைம்மாறே.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்—வேறு.

7. மாற்றரிய தபோநிதியாம் வரகுருசங் கராசாரியர் மதிக்கும் கீர்த்தி
சாற்றரிய தாக்ஷிணாத் தியகலா நிதியேநிற் சார்வார்க் கென்றும்
ஏற்றரிய குணநிதியே! இணையில்லாக் குருநிதியே! யாவ ராலும்
போற்றரிய புலநிதியே! புகல்நிதியே! முத்தமிழ்க்குப் புலவ ரேறே!

---

4. தமிழ்நாட்டில் வீரர்பெருமையும் கோவில்மாட்சியும் அன்பர்பணியும் மல்கியிருப்பதோடு ஐயரவர்கள் ஆற்றிய சொற்பணியும் (புத்தகப்பணியும்) சேர்ந்து விளங்குதல் சுட்டப்பட்டது.

5. புராரி - திரிபுரத்தை அழித்த சிவபிரான்; பொருந்தலர் - பகைவர்.

6. மீனாக்ஷிசுந்தரர் - தமிழ்த்தெய்வமாகிய மதுரைச் சிவபிரான்; இதுவே நமது ஐயரவர்களுக்கு வித்யாகுருவான திரிசிரபுரம் மகாவித்வான் பிள்ளையவர்கள் பெயரும். சங்கம் - சிலேடை, தாய் பாலூட்டும் சங்கு என்றும், தமிழ்ச் சங்கம் என்றும் பொருள்படும்.

7. ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடத்து ஜகத்குருவாய் விளங்கும் சங்கராசார்ய சுவாமிகள், ஐயரவர்களுக்கு தாக்ஷிணாத்தியகலாநிதி எனப் பட்டம் அளித்துள்ளது குறிப்பிடப்பட்டது. ஒரு நிதியேயன்றிப் பலநிதிகளாக விளங்குதல் பின்னிரண்டடியிற் காண்க.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

8. முச்சங்கம் திகழ்ந்ததமி ழகத்தே வந்து
முன்னுள்தொட் டிலகுபல முடிசார் மன்னர்
மெச்சுபெரு வள்ளன்மார் புலவோர் வீரர்
வியன்வாலாற் றியல்நூ நுவிப் பல்லோர் இந்நாள்
இச்சையுடன் செயும்சரித நூலா ராய்ச்சி
இன்னவெலாம் நீயருளின் நிறைவா விட்ட
பிச்சையின்நல் விளைவன்றே? நச்சி நாளும்
பெரியோர்தம் உச்சியிற்கொள் விச்சைவாழ்வே.

கலிவிருத்தம்.

9. வாழ்க மாமகோ பாத்தியா யர்வளம்
வாழ்க செந்தமிழ் வண்கலை நாளுமே
வாழ்க சென்னை வளர்கலா சங்கம்சீர்
வாழ்க வையகம் தக்கவர் வாழ்கவே.

வே. முத்துஸ்வாமி ஐயன், எம்.ஏ.,எல்.டி.,
பால பாடசாலைப் பரிசோதகன்.
போளூர்

---

8. பற்பல தமிழ்நாட்டுப்பெரியார் சரித்திர ஆராய்ச்சிக்கு ஐயரவர்கள் பதிப்புநூல்களே பெரிய ஆதாரமென்பது கூறப்பட்டது.

9. ஈற்றடியில் தக்கவர் என்பது முதற்கவியின் முதற்சொல்லாகிய தக்க என்பதோடு மண்டலித்துநிற்கும்.

# மகாபாரத வசனப்பதிப்பும் மதிப்புக்கவிகளும்.



நம் நாட்டில் இராமாயணம் மஹாபாரதம் என்னும் இரண்டு இதிகாசங்களும், அரிய பெரிய தர்மங்களைப்புகட்டும் சிறந்த நூல்களாக, ஆதிகாலந்தொட்டு நிலவிநிற்கின்றன என்பதை யாவரும் நன்கறிவர்.

இவற்றுள், மஹாபாரதம் ஸ்ரீவேதவியாஸபகவானால் வடமொழியில் இயற்றப்பட்ட ஓர் உத்கிருஷ்டமான கிரந்தம். இதனை 'மஹா' என்னும் அடைமொழியே தெற்றெனப் புலப்படுத்தும். இதன் அருமைபெருமைகளை உணர்ந்து, இதனைத் தமிழ்மொழியில் இனிய வசன நடையில் பதிப்பிக்கப்புகுந்து, கும்பகோணம்காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ உப. வே. மணலூர் ம. வீ. இராமாநுஜாசாரியர் அவர்கள், தாம் 1908-ஆம் ஆண்டில், காலேஜ் வேலையினின்றும் விலகி ஓய்வெடுத்துக்கொண்டதுமுதல் இதுகாறும் (சுமார் 23-வருஷங்களாக) இவ் வொரே துறையில் ஈடுபட்டுச் சலியாது உழைத்து, இவ்வரிய நற்காரியத்தை இப்போது நிறைவேற்றியிருக்கிறார்கள்.

இவ்வசனநூல் சஞ்சிகை ஒன்றுக்கு 200 பக்கம் கொண்ட 45 சஞ்சிகைகளிற் பூர்த்தியாயிருக்கிறது. இதில் 18 பருவங்களும் 14 பெரும் புத்தகங்களாகத் தொகுத்துக் கட்டப்பட்டிருக்கின்றன. இப் பாரதநூலின் பாரப்பதிப்புக்கு ரூ 135000 செலவாயிற்றென்று தெரிய வருகிறது.

இப்பதிப்புநிகழ்வினிடையே நம் தமிழ்நாட்டார்தம் இயற்கை உபேக்ஷையாலும், ஐரோப்பியப்பெரும்போர், வியாபார விளம்பனம், பொருள்முட்டுப்பாடு முதலிய இடைஞ்சல்களாலும், ஏற்பட்ட இடையூறுகள் மிகப் பல. இவற்றையெல்லாம் சிறிதும் பொருட்படுத்தாது நமதாசிரியர்,

"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்."

என்னும் குமரகுருபரஸ்வாமிகள் திருவாக்கிற் கிணங்கத் தளரா ஊக்கத்துடன், இப் பெரும்பணியில் முனைத்துநின்று, இதனை இனிதுமுடித்தது தமிழுலகுக்குப் பேருபகாரமாகும்.

பாரதத்தைப் பண்டிதர்கள் ஐந்தாம்வேதம் என்பர்.

"எல்லாப் பொருளும் இதன்கண் உள ; இதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லை"

என்று திருவள்ளுவமாலையில், திருக்குறளைப்பற்றிக் கூறியிருப்பது, இவ் வொள்ளியநூலுக்கும் உரிமையிற் பொருந்துவதாகும். பரந்த இந்நூலினிடம் ஸ்ரீகண்ணபிரான் திருவநட்டிறமும், பஞ்சபாண்டவர் தம் சகோதரவாஞ்சையும், வீரதீரர்களின் வெற்றிப்பிரதாபமும், பற்பல அரசியற்றருமமும், உலகியற்றருமமும், பிறவும் *பரவையுள் மணிபோல பரவிப் படர்ந்து யாண்டும் காணப்பெறும்.

இங்ஙனம் அரிய நூற்பணி இயற்றிய ஆசிரியரைச் சின்னாட்கு முன்னர்ச் சென்னை ஸம்ஸ்கிருத சங்கத்தார் பாராட்டிப் 'பாஷா பாரத துரந்தரர்' என்று பட்டம் சூட்டித் தம் நன்மதிப்புக்கறிகுறியாக ஓர் உபசாரப் பத்திரமும் சித்திரவேலைப்பாடமைந்த சிமிழிற் சேர்த்தளித்தனர். அவ்வமயம் சென்னை உயர்நீதிமன்றத்து நீதிபதிகளுள் ஒருவராகிய மகா-ள-ள-ஸ்ரீ திவான்பகதூர் K. சுந்தரம் செட்டியாரவர்கள் சபைத் தலைமைவகித்துப் பாரதப்பதிப்பைப் பாராட்டிப்பேசினர்.

கும்பகோணத்தில் பிரமஸ்ரீ ப்ரொபஸர் K. சுந்தரராமையர் அவர்கள் முதலான பற்பல விற்பனர்கள் கூடிச் சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜாயிருந்தவரும் பிரபல ஹைகோர்ட்டுவக்கீலுமான பிரமஸ்ரீ V. V. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் அவைத்தலைமைவகிக்க, நமது ஆசிரியர் கைங்கரியச்சிறப்பைப் பலபடப் புகழ்ந்து, 'அன்னாருக்கு நம் நாட்டார் ஒரு தக்கநிதி சேர்த்துதவுவது' என்று முடிவுசெய்துள்ளார்கள். இங்ஙனம் செய்தது மிகவும் பொருத்தமே ; ஏனெனில் பாரதப்பதிப்புப் பெருஞ்செலவில் ரூ 15000 வரை ஆசிரியர் கைப்பொறுப்பாக நிற்கின்றதெனத் தெரிதலின் என்க. இதனைத் தமிழ்வாணர்கள், மொழியால் முடிவுசெய்தமையோடமையாது, செயலால் சித்திக்கக் காண்பது மிகவும் அவசியமாகும். நமது ஆசிரியர் பாரதப்பதிப்பு வகையிற் பட்டுள்ள பாரக்கடனைத் தீர்ப்பது தமிழ்நாட்டார்கடன்மையே யன்றோ ?

---

*பரவை - கடல் ; கடல் ரத்னங்களுக்கு இருப்பிடமாதலால் ரத்னாகரம் என்றும் அதற்குப் பெயர் உண்டு.

இப்பெரியாரின் செயற்கரும் பெருஞ்செயற்சிறப்பை வாயார வாழ்த்தி, அவர்களுக்கு எல்லாவித நன்மைகளும் மேன்மேலும் ஓங்க வேண்டுமென்று, எல்லாம்வல்ல முழுமுதற்கடவுளை மனமாரச் சிந்தித்து, வழுத்துகின்றேன்.

இந்த எனது பாராட்டு மொழிகளை, மேற்கூறிய கும்பகோண மகா சபையில் படிப்பிக்குமாறு சில மதிப்புக்கவிகளாக அனுப்பிவைத்தேன். நம் 'செந்தமிழ்' நேயர்கள் கண்ணுறும்வண்ணம் அவற்றை இங்கே தருகின்றேன். பாரதத்தின் பெருமைகருதி இவற்றை அன்பர்கள் ஏற்றுக் கொள்வார்களாக.

## மதிப்புக்கவிகள்.

### நேரிசைவெண்பா.

1. மாபா ரதவசனம் வண்டமிழிற் பெய்பெருமை
ஆ! பார் இதுபே ரதிசயமென் — றேபாரோர்
தாமா தரிக்குமா தந்தான் மணலூர்வாழ்
ராமா நுஜமால் நயந்து.

2. நடையழகும் சொல்லழகும் நாளு வளஞ்சார்
தொடையழகும் அச்சுத் தொகைபின் — கிடையழகும்
புத்தகத்தின் கட்டழகும பொன்னிற்பேர் வெட்டழகும்
நத்தகமாம் யார்க்குமே நன்கு.

3. உழைத்துக் களைத்துமிக ஒப்புகொளுங் காலத்து)
இழைத்த பெரும்பணியி தென்னில் — தழைத்தவுளத்
திட்பமுடன் ஒட்பநுட்பம் தெய்வ அருட் பெட்பின்சீர்
கட்புலனிற் கண்டாம் கதித்து.

4. அங்கண்மா ஞாலத் தரும்பெரும்ஓர் செய்கைசெயின்
அங்குமா பாரதமஃ தாமென்பர் — இங்குமகா
பாரதமா நூன்முழுதும் பைந்தமிழில் தந்தாற்கு
நேரெதனைச் சொல்வாம் நினைந்து.

5. வாரிசூழ் வையத்து மா"தரும மேஜெய"மாம்
பேரிதிகா சந்தமிழிற் பேர்த்துதவும் — ஆரியனை
நேரிதென ஓர்கால் நிகழ்ந்தொரு கால்வறக்கும்
மாரிதனைக் கூறேம் மதித்து.

---

2. கிடை - அமைப்பு. நத்து அகம் - விரும்பும் மனம்.

6. முந்து பகீரதனார் மூள்தவத்து நீள்பயனா
வந்துவண் கங்கை வயங்கலென—இந்த
மறைப்பெரியோன் நல்முயல்வால் வண்டமிழிற் கைந்தாம்
மறைப்பொலிவு வாய்த்த வளம்.

7. முதனூலோ ஆழி முழங்குதிரை கள்பல்
விதமாம் கிளைக்கதைதாம் மேவி—இதமாகும்
நீதிமணி இம்மூந் நீருண் டுமிழ்ந்தமுனி
ஓதிவ் இராமா நுஜன்.

8. அருப்புவகை பெருக்கம் அன்புபொறை ஆன்ற
பெரும்புலவன் மாகீர்த்தி பேசில்—இரும்புவனத்(து)
அன்று மகாபா ரதஞ்செய் வியாதனென
என்றும் மிளிரும் இயைந்து.

9. மாதவன்வண் மைத்திறமும் மாதர்கள் போர்த்திறமும்
போத அறன் மைந்தன் பொறைத்திறமும்—ஆதவன்செய்
பேரொளி போலப் பிறங்கத் தமிழ்செய்தான்
சீரொளிர்க யாண்டும் செழித்து.

10. பாரதநாட் டுக்கணியாப் பல்லறமும் நாட்டுமகா
பாரதநூல் வாழி பாவுபுகழ்—சூதரினை
வண்டமிழிற் போர்த்த இராமாநுஜஆசான் பேரும்
எண்டிசையும் வாழி இனிது.

வே. முத்துஸாமி ஐயன், எம்.ஏ., எல்.டி.,
பால பாடசாலைப் பரிசோதகன்
போளூர்

---

7, முதனூலென்னும் சமுத்திரம், பல கிளைக்கதைகளாகிய அலைகளுடனும், இதோபதேசமென்னும் ரத்தினங்களுடனும் கூடியது. இதனை முன் அலைக்கடலை உண்டு மீண்டும் வெளியிட்ட அகஸ்தியரைப்போல இக்கலைக் கடலை மொழிபெயர்த்தவினர் ஆசிரியர் எனப்பட்டது.

9. போத அறன்மைந்தன் - ஞானவானான தருமபுத்திரர். ஆதவன் - சூரியன்.

உ

**1932-ஸ் அக்டோபர்-மீ 28-உ (ஆங்கீரஸ-ஸ் ஐப்பசி-மீ 12-உ)**
**காலை 9-மணிக்குக் கூடிய மதுரைத்தமிழ்ச்சங்கத்தின்**
**காரியநிர்வாகஸபையில் முடிவுசெய்யப்பெற்ற**
**தீர்மானங்களின் விவரம்.**

---

1. மகா-ள-ள-ஸ்ரீ K. ராமையங்கார் அவர்கள், B.A., B.L.,
அக்கிராஸனம் வகித்தவர்.
2. ,, S. சோமசுந்தரபாரதி அவர்கள், M.A., B.L.
3. ,, V. S. ராமஸ்வாமி சாஸ்திரியார் அவர்கள், B.A., BL.
4. ,, N. R. கிருஷ்ணஸாமி ஐயங்கார் அவர்கள், B.A., B L.
5. ,, T. C. ஸ்ரீநிவாஸையங்கார் அவர்கள், B A., B.L.
இவர்கள் வந்திருந்தார்கள்.

**தீர்மானங்கள்.**

I. 1932-ஸ் ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களின் வரவு செலவு கணக்குகள் அங்கீகரிக்கலாயின.

II. பெருந்தொகை முதற்பகுதி குறிப்புரையை முடித்து வெளிப்படுத்த வேண்டுமென்று தீர்மானிக்கலாயிற்று. கம்பராமாயண இன்கவித்திரட்டு விஷயமான ஆலோசனை தள்ளிவைக்கலாயிற்று.

III. சங்கக்கட்டிடத்திற்கும் தொட்டப்பநாயக்கனூர் ஜமீந்தாரவர்களின் மனைக்கும் மத்தியிலுள்ள சங்கம் காம்பவுண்டு சுவரைப் பூராவும் இடித்துவிட்டு ஷை இடத்தில் சரியான அஸ்திவாரம்போட்டுப் புதிதாகச் சுவர் கட்டவும், ஷை சுவரில் தமக்கு யாதொரு உரிமையையும் பாராட்டாது பூராபாத்தியதையையும் சங்கத்துக்கேவிட்டுவிடவும் ஷை ஜமீந்தாரவர்கள் சம்மதிப்பதாயிருந்தால், அவர்கள் கேட்டுக்கொண்டபடி சுவர்கட்டுவதற்கு அனுமதிக்கலாமென்று தீர்மானிக்கலாயிற்று.

IV. சங்கம் தனித்தமிழ்ப்பரீக்ஷை சம்பந்தமாக விண்ணப்பித்துள்ள இரண்டு மாணவர்களின் விடைப்பத்திரங்கள் சோதனைக்காக இப்பொழுது இல்லாமையால் அவ்விருவர்க்கும் தவறிய பாடத்தில் மறு பரீக்ஷை நடத்தவேண்டுமெனத் தீர்மானிக்கலாயிற்று.

V. சிதம்பரம் அண்ணாமலை ஸர்வகலாசாலை செனேட்டுக்குச் சங்கத்தின் பிரதிநிதி ஒருவரைத் தெரிந்தெடுத்தல்சம்பந்தமான ஆலோசனை தள்ளிவைக்கலாயிற்று.

மதுரை,
28—10—1932.

K. ராமையங்கார்,
அக்கிராசனம் வகித்தவர்.

---

உ

# மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1932-ம் ௵ ஆகஸ்டுமாத வரவு செலவு கணக்கு.

| விவரம். | வரவு 1932 ஆகஸ்டு | | | வரவு 1931 ஆகஸ்டு | | |
|---|---|---|---|---|---|---|
| I General Section: | | | | | | |
| (1) மாதச்சந்தா வகையில் வரவு ... | 50 | ... | ... | | | |
| (2) பாங்கில் போடப்பட்டுள்ள தொகைக்கு வட்டிவகையில் வரவு ... | 677 | 12 | ... | | | |
| (3) சங்கக்காலிவிடத்துக்கு மாத வாடகை வரவு ... | 28 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 755 | 12 | ... | 1803 | 4 | ... |

| விவரம். | செலவு 1932 ஆகஸ்டு | | | செலவு 1931 ஆகஸ்டு | | |
|---|---|---|---|---|---|---|
| I General Section: | | | | | | |
| (1) சங்கம் மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகளுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 100 | ... | ... | | | |
| (2) சங்கக்கலாசாலை உபாத்தியாயர்களுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 127 | ... | ... | | | |
| (3) சங்கக்கலாசாலை மாணவர்களுக்குப் போஷணைக்காகச் செல்லாக்கியது. ... | 144 | ... | 6 | | | |
| (4) Stationery contingencies வகையிற்செலவு ... | 1 | 11 | ... | | | |
| (5) தபால், தந்தி வகையிற்செலவு | 2 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 374 | 11 | 6 | 355 | 10 | 9 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| II EDITORIAL SECTION: | | | | | | |
| (1) சங்கத்தின் அங்கத்தினர்களிடமிருந்து சந்தா வகையில் வரவு ... | 17 | ... | ... | | | |
| (2) செந்தமிழ்ப் பத்திரிகைக்குச் சந்தா வகையில் வரவு ... | 8 | ... | ... | | | |
| (3) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்பனையில் வரவு ... | 189 | 6 | ... | | | |
| (4) செந்தமிழ்ப் பழைய பிரதிகள் விற்றவகையில் வரவு... | 5 | 8 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 219 | 14 | ... | 117 | 9 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| II EDITORIAL SECTION: | | | | | | |
| (1) ஷெ ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 35 | ... | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் அச்சிடும் சம்பந்தமாக ஸ்டேஷனெரி கண்டின்ஜன்ஸி வகையிற் செலவு. ... | 149 | ... | 6 | | | |
| (3) ஷெ சம்பந்தமாக அச்சுக்கூலி, பைண்டிங்கூலி வகையிற் செலவு. ... | 54 | ... | ... | | | |
| (4) தபால், தந்திவகையிற் செலவு. ... | 15 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 253 | ... | 6 | 126 | 5 | 3 |

| III Press Section: | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) அச்சுக்கூலி வகையில் வரவு ... | 71 | 4 | ... | | | |
| (2) ஷை அச்சுவேலைகட்காக வாங்கிய காகிதங்கட்குக் கிரையம் வரவு ... | 8 | 7 | ... | | | |
| (3) பைண்டிங்கூலி வகையில் வரவு ... | 42 | 7 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 122 | 2 | ... | 129 | 3 | ... |

| III Press Section: | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) அச்சாபீஸ்சிப்பந்திகளுக்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 106 | 14 | 6 | | | |
| (2) ஷை ஆபீஸ் Stationery Contingencies வகையிற் செலவு. | 9 | 15 | ... | | | |
| (3) பைண்டிங் ஆபீஸ் சிப்பந்திகளுக்குச் சம்பளம் செல்லாக்கியது | 28 | 5 | 11 | | | |
| (4) ஷை ஆபீஸ் Stationery Contingencies வகையிற் செலவு | 7 | 14 | 9 | | | |
| மொத்தம் ரூ ... | 153 | 2 | 2 | 159 | 6 | 2 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ ... | 1097 | 12 | ... | 2050 | ... | ... |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத்தொகை ரூ ... | 16311 | 5 | 11 | 13687 | 7 | 8 |
| ஆகமொத்தம் ரூ ... | 17409 | 1 | 11 | 15737 | 7 | 8 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆக மொத்தம் செலவு ரூ ... | 780 | 14 | 2 | 641 | 6 | 2 |
| மாத முடிவில் மீதி இருப்புத் தொகை ரூ ... | *16628 | 3 | 9 | 15096 | 1 | 6 |
| ஆகமொத்தம் ரூ ... | 17409 | 1 | 11 | 15737 | 7 | 8 |

*By M. U. C. B. Pass Book Rs. 5000- 0- 0

M. R. C. C. Bank Pass Book Rs. 10994- 2- 2

Cash on hand Rs. 634- 1- 7

16628- 3- 9

*Audited and found correct,*

V. S. RAMASWAMI,

AUDITOR,

26—10—32.

LAKSHMINARAYANAN,

*Manager,*

MADURA TAMIL SANGAM.

5—9—1932.

உ

# மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1932-ம்வருஷ செப்டம்பர்மாத வரவு செலவு கணக்கு.

**வரவு**

| விவரம் | 1932 செப்டம்பர் | | | 1931 செப்டம்பர் | | |
|---|---|---|---|---|---|---|
| I General Section : | | | | | | |
| (1) மாதச்சந்தாவகையில் வரவு... | 100 | ... | ... | | | |
| (2) பாங்கில் போடப்பட்டுள்ள தொகைக்கு வட்டிவகையில் வரவு ... | 74 | 11 | 1 | | | |
| (3) சங்கக்கலாசாலைக்கு மாத வாடகைவரவு ... | 28 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 202 | 11 | 1 | 1173 | 11 | 10 |

**செலவு**

| விவரம் | 1932 செப்டம்பர் | | | 1931 செப்டம்பர் | | |
|---|---|---|---|---|---|---|
| I General Section : | | | | | | |
| (1) சங்கம்மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 100 | ... | ... | | | |
| (2) சங்கக்கலாசாலை உபாத்தியாயர்கட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 127 | ... | ... | | | |
| (3) சங்கக்கலாசாலை மாணவர்களுக்குப் போஷணைக்காகச் செல்லாக்கியது. ... | 138 | 12 | 4 | | | |
| (4) Stationery, contingencies வகையிற் செலவு ... | 1 | 10 | ... | | | |
| (5) தபால், தந்திவகையிற்செலவு | 2 | ... | ... | | | |
| (6) முனிசிபாலிடிக்கு வரி செலுத்தியது ... | 73 | 13 | 11 | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| II EDITORIAL SECTION : | | | | | | |
| (1) 'செந்தமிழ்'ப் பத்திரிகைக்குச்சந்தாவகையில்வரவு ... | 10 | ... | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு ... | 100 | 10 | ... | | | |
| (3) செந்தமிழ்ப் பழையபிரதிகள் விற்றவகையில் வரவு. ... | 7 | 13 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 118 | 7 | ... | 71 | 4 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (7) சங்கமாபீசு சில்லறைவேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி பைண்டிங்கூலி வகையிற் செலவு. | 2 | 4 | ... | | | |
| மொத்தம் ரூ | 445 | 8 | 3 | 367 | 11 | 2 |
| II EDITORIAL SECTION: | | | | | | |
| (1) ஷை ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 35 | ... | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் அச்சிடும் சம்பந்தமாக ஸ்டேஷனெரி கண்டின்ஜன்ஸி வகையிற் செலவு. ... | 3 | 8 | 6 | | | |
| (3) ஷை சம்பந்தமாக அச்சுக்கூலி பைண்டிங்கூலி வகையிற் செலவு ... | 180 | 12 | ... | | | |
| (4) தபால் தந்திவகையிற் செலவு | 13 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 232 | 4 | 6 | 109 | 7 | 6 |

| III Press Section: | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) அச்சுக்கூலிவகையில் வரவு. | 101 | 12 | ... | | | |
| (2) பைண்டிங் கூலிவகையில் வரவு ... | 89 | ... | ... | | | |
| மொத்தம் ரூ ... | 190 | 12 | ... | 135 | 8 | ... |

| III Press Section: | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (1) அச்சாபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது ... | 111 | 9 | 5 | | | |
| (2) ஷை ஆபீஸ் Stationery contingencies வகையிற் செலவு. | 11 | 2 | ... | | | |
| (3) பைண்டிங் ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல்லாக்கியது .. | 31 | 14 | 3 | | | |
| (4) ஷை ஆபீஸ் Stationery Contingencies வகையிற் செலவு. | 17 | 13 | 9 | | | |
| மொத்தம் ரூ. ... | 172 | 7 | 5 | 197 | 2 | 10 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ. ... | 511 | 14 | 1 | 1380 | 7 | 10 |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத்தொகை ரூ. ... | 16628 | 3 | 9 | 15096 | 1 | 6 |
| ஆகமொத்தம் ரூ. ... | 17140 | 1 | 10 | 16476 | 9 | 4 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆக மொத்தம் செலவு ரூ. | 850 | 4 | 2 | 674 | 5 | 6 |
| மாதமுடிவில் மீதியிருப்புத் தொகை ரூ ... | *16289 | 13 | 8 | 15802 | 3 | 10 |
| ஆக மொத்தம் ரூ ... | 17140 | 1 | 10 | 16476 | 9 | 4 |

*By M. U. C. B.
Pass Bk. Rs. 5000- 0- 0
M.R.C.C. Bank
Pass Bk. Rs. 11044- 2- 2
Cash on hand Rs. 245-11- 6
16289-13- 8

*Audited and found correct.*

V. S. RAMASWAMI,
AUDITOR.
26—10—1932.

LAKSHMINARAYANAN,
*Manager*,
MADURA TAMIL SANGAM.
5—10—1932.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப் பத்திரிகை.

---


## முப்பதாந்தொகுதி.

பிரஜோத்பத்தி—ஆங்கீரஸ ௵.






## *Vol.* XXX.

**1931–1932.**

பத்திராசிரியர்: திரு. நாராயணையங்கார்.

மதுரைத் தமிழ்ச்சங்க முத்திராசாலை,

மதுரை.

௨.

# முப்பதாந்தொகுதியின் உள்ளுறை.


| விஷயம். | | எழுதியவர். | பக்கம். |
|---|---|---|---|
| இறப்பு:— | | ஸ்ரீமத். க. சு. நவநீதகிருஷ்ணபாரதியார். | ௧௭௨ |
| உதிர்மலர்மாலை:— | | | ௮௬ |
| எல்லப்பநாவலர்:— | ,, | திரு. சோமசுந்தர தேசிகர். | ௨௫௫ |
| ஒரு திருத்தம் :— | ,, | க. சு. நவநீதகிருஷ்ணபாரதியார். | ௨௪௫ |
| கம்பராமாயண இன்கவித்திரட்டு:— | ,, | ராவ்ஸாஹிப். வெ. ப. சுப்பிரமணிய முதலியார். | ௬௫, ௨௪௧, ௨௬௫. |
| ஷை இன்கவித்திரட்டுத்திருத்தம் :— | | ஷை ஷை | ௨௮0 |
| கம்பராமாயணக் கௌஸ்துபமணி மாலை:— | ,, | K. N. சிவராஜபிள்ளை, B.A. | ௫௬ |
| சேனாவரையப் பதிப்பும் பிழை திருத்தமும்:— | ,, | ஜ. இராஜு முதலியார். | ௨௪௧ |
| சேனாவரையருரைப் பதிப்பும் பிழை திருத்தமும்:— | ,, | சி. கணேசையர். | ௧௬௭ |
| தத்துவப்பிரகாசர் :— | ,, | திரு. சோமசுந்தரதேசிகர். | ௨௨௩ |
| தமிழின் பழமை :— | | திரு. நாராயணையங்கார், பத்திராசிரியர். | ௧ |
| திருப்புறம்பயத்துக் கல்வெட்டுக்களிலும் செப்பேடுகளிலும் கண்ட சிலசெய்திகள் :— | ,, | வை. சுந்தரேசவாண்டையார். | ௧௪௬ |
| தொல்காப்பியத்து அகத்திணையியலின் 19-ம் சூத்திரம்:— | ,, | P S. சுப்பிரமணிய சாஸ்திரியார், M.A., PH. D L. T. | ௯௫ |
| நவமணிமாலை :— | ,, | வே. முத்துஸாமி ஐயர், M.A, L T. | ௨௮௧ |
| நாம் என்னும் உரிச்சொல்:— | ,, | பண்டித. அ. கோபாலையர். | ௨௫௩ |
| நியமச்சூத்திரம்:— | ,, | பண்டித. ஆ. சிவசுப்பிரமணிய ஐயர். | ௧௨௬ |
| பரிசோதனத்தொடர்:— | ,, | பண்டித, சித, நாராயணசாமியார். | ௭0 |

